### V.—ADJOURNMENT MOTION *RE* REPORTED SPEECH OF THE PRESIDENT OF INDIA ON LANGUAGE ISSUE

MR. SPEAKER : I have received notice of an adjournment motion from the hon. Member, Sri M. Kalyanasundaram. It reads as follows :—

'I hereby give notice of the following adjournment motion to discuss the serious student unrest in the City and the districts because of the reported speech of President Prasad that he desired protagonists of English in the South to reciprocate the goodwill of the North by not imposing on them (Uorth Indians) English which was a foreign language.'

How are we competent to discuss the speech of President Prasad? If the hon. Member confines himself to the first part of his motion, I will allow him to speak about it. But he is not entitled to refer to the later portion of his motion. So, he should refer only to the student unrest in the City and not to the speech of President Prasad.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, நான் இந்தச் சபைக்குக் குறிப்பிட்டு காட்ட விரும்புவது ஜனாதிபதி அவர்களுடைய பிரசங்கத்தினால் மாணவர்களிடத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய சந்தேகம், அதனால் ஏற்பட்டிருக்கக்கூடிய கிளர்ச்சி ஆகியவை பற்றிதான். ஜனாதிபதி அவர்களுடைய பிரசங்கத்தைப் பற்றியோ, அதில் உள்ள விஷயங்களைப் பற்றியோ அல்ல. மொழி விஷயம் மிகவும் சிக்கலான விஷயம். மக்கள் யாரையும் உணர்ச்சி வசப்படுத்தக் கூடிய விஷயம். ஆங்கிலம் என்பது தொடர்ந்து உதவி ஆட்சிமொழியாக இருக்கவேண்டுமென்பது நம் மக்களுடைய அபிப்பிராயம். இந்தச் சபையில் உள்ள எல்லாக் கட்சிகளும் சேர்ந்து அந்த முடிவைச் செய்திருப்பதன் காரணமாக நமது அரசாங்கமும் அதை ஏறத்தாழ ஏற்றுக் கொண்ட ஒன்றாகும். இதனுடைய நோக்கம் அந்நிய மொழியை யார் மீதும் சுமத்த வேண்டுமென்பதல்ல. ஆனால் ஜனாதிபதி அவர்களுடைய பிரசங்கத்தில் ஆங்கிலம் நீடித்திருக்க வேண்டுமென்பதானது அந்நிய மொழியைப் பிறர் மீது சுமத்த விரும்பலாமா என்பது போல அமைவதாகச் சிலர் கருதுகிறார்கள். அப்படி பத்திரிகையில் வெளிவந்ததோ, வெளிவந்ததைத் தவறாகத்தான் மாணவர்கள் புரிந்து கொண்டிருக்கிறார்களோ—மாணவர்களிடத்தில் இப்போது தவறான அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்தப் பிரச்னை சம்பந்தமாக நம் அரசாங்கத்தின் நிலை என்ன என்பதை விளக்க வேண்டும் என்பதுதான் நான் கோருவது.

THE HON. SRI C. SUBRAMANIAM: இது முதலிலே "மாணவர்களிடையே" என்று சொல்லும் போது எல்லா மாணவர்களிடையேயும் சலசலப்பு இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சில மாணவர்களிடையேதான் ஏற்பட்டிருக்கிறது. நேற்று நமது அசெம்பளி கட்டிடத்திற்கும் கூட சில மாணவர்கள் வந்திருந்தார்கள். மேலும் நேற்று நமது ஜனாதிபதியின் பிரசங்கம் பிரசுரிக்கப்படவில்லை. பதினைந்தாம் தேதி பத்திரிகைகளுக்கும் விடுமுறை தினம். ஆகவே ஜனாதிபதி அவர்கள்

பிரசங்கத்தைப் படித்துத் தெரிந்துக் கொண்டிருப்பதாக ஏற்படவில்லை. பேசினதைக் கேட்டவர்கள் போய் தப்பாகச் சொன்ன காரணத்தினுலேயே ஏற்பட்ட கிளர்ச்சி அது என்று தோன்றுகிறது. ஒருவிதமான பீதியை மாணவர்களிடத்தில் ஏற்படுத்தி அவர்களைத் தூண்டிவிட்டதனுல் ஏற்பட்டது என்பது எனக்குத் தெரிந்த தகவல். இன்றைக்கு ஜனுதிபதியின் பிரசங்கம் எல்லாப் பத்திரிகைகளிலும் வெளிவந்திருக்கிறது. எல்லாப் பத்திரிகைகளுமே அதை வரவேற்று இருக்கின்றன. இது வரையிலும் கொடுத்த வாக்குறுதிகளில் எந்தவிதமான சந்தேகமும் இல்லாது தங்கள் உரையில் ஆங்கிலத்தைப் பற்றி நாம் கோரியதை ஒப்புக் கொண்டு குறிப்பிட்டிருக்கிருர்கள். இதிலே ஆங்கிலத்தை இந்தி பேசுகின்றவர்களின் பேரில் திணிக்கக் கூடாது என்று பேசுவதற்கு இடம் இல்லை. ஆங்கிலம் உதவி நிர்வாக மொழியாக இருக்க வேண்டுமென்பதைத்தான் நாம் சொல்லுகிருேம். இந்தி வரவே கூடாது என்று சொல்லவில்லை. ஆனுல் இந்தி வரவே கூடாது, ஆங்கிலம் தொடர்ந்து இருக்கத் தான் வேண்டும், என்று ஒரு சிலர் தலைவர்களில் பேசுகின்றவர் களும் இருக்கிருர்கள். அப்படி ஆங்கிலம்தான் நிர்வாக மொழியாக இருக்க வேண்டுமென்ருல் அந்நிய மொழியைக் கற்றுக்கொள்ளாமல் இருக்கிறவர்களின் மீது அதை திணிக்கக் கூடாது என்பதுதான் அவர் குறிப்பிட்ட விஷயம். இந்தி ஆங்கிலம் ஆகிய இரண்டையும் நிர்வாக மொழியாக ஒப்புக் கொள்வதில் அந்தச் சந்தேகம் வரவே இடமில்லை. 1965-க்கு மேல் ஆங்கிலம் படிக்க விரும்பாதவர்களின் மீது—ஆங்கிலம் தான் நிர்வாக மொழியாக இருக்கவேண்டுமென்று—ஆங்கிலத்தை திணிக்கக் கூடாது என்பதுதான். ஆகவே ஜனுதிபதி அவர்களுடைய பிரசங்கத்தில் ஏற்பட்ட சந்தேகம் கிளர்ச்சிக்குக் காரணம் அல்ல.

நமது முதல் மந்திரி அவர்கள் கூட அந்த மாணவர்களை அழைத்துப் பேசும் போது " சுப்ரீம் கோர்ட்டில் இந்தி வந்து விடுமோ என்று பயப்படுகிருேம் " என்று சொன்னுர்கள் அவர்கள். மற்றப் பகுதிகளில் ஆங்கிலத்திற்கு ஒரு கால வரையறை ஏற்படுத்தியபோது கூட சுப்ரீம் கோர்டுக்கு அந்தக் காலவரை கிடையாது. இன்னும் ஒரு தலைமுறைக்குக் கூட சுப்ரீம் கோர்ட்டில் ஆங்கிலம் தான் நீடித்து இருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. அப்போது வருகிறவர்கள் என்ன விதமாக முடிவு செய்துகொள்கிருர்களோ அது அவர்களைப் பொறுத்தது. ஆகவே இப்படி அவசியமற்ற ஒரு காரணத் திற்காக எதற்காக கிளர்ச்சி, கோஷம் என்று நமது முதல் மந்திரி கேட்டார்கள்.

" இல்லை, இல்லை, இப்படி ஸ்ரீ. ஏ. கே. சென் அவர்கள் ஒரு கருத்துத் தெரிவித்திருக்கிருர்கள் " என்று அந்த மாணவர்கள் சொன்னுர்கள். நமக்கு ஒருவிதமான சக்தியும் கிடையாது. பிறர் " ப்பூ " என்று ஊதினுல் நாம் கீழே விழுந்துவிடுவோம் என்று தன்னம்பிக்கையற்ற முறையில் எல்லாவற்றையும்

17th August 1960] [Sri C. Subramaniam]

நினைப்பதுதான் இத்தகைய கிளர்ச்சிக்குக் காரணம். இதுதான் அடிப்படை தவறு. நாம் எதை வேண்டுமென்று சொல்கிறோமோ அதைப் பிறர் கொடுத்துப் பெறுவது இல்லை. நியாயம் என்ற முறையில் அதை நாமே பெறக்கூடிய சக்தி நமக்கு இருக்கிறது. ஏதோ ஒரு மந்திரி ஒரு விஷயத்தைச் சொன்ன வுடன் பீதி அடைவது, கோஷங்கள் போடுவது கிளர்ச்சி செய்வது என்பதற்கு எல்லாம் அவசியமே இல்லை. இந்தச் சர்க்கார் இருக்கிறவரையில் தமிழ் மக்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்படும். மொழி சம்பந்தப்பட்ட வரையில் தமிழ் மக்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் காப்பாற்றப்படும் என்கிற உறுதிமொழியை நான் அளிக்கிறேன். வீண் கிளர்ச்சி, வீண் கோஷங்கள் இவைகள் எல்லாம்—அதிலும் முக்கியமாக மாணவர்களிடத்தில் அவசியம் இல்லை என்று இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக் கொள்கிறேன். ஒத்திவைப்புப் பிரேரணை மூலம் இதை விளக்குவதற்கு எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்ததற்கு நான் என் நன்றியைத் தெரிவித்து கொள்கிறேன். மற்றபடி இந்த ஒத்திவைப்புப் பிரேரணைக்கு அவசியம் இல்லை என்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER: கனம் நிதி மந்திரி அவர்கள் கொடுத்த விளக்கத்திற்குப் பிறகு திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் தம்முடைய ஒத்திவைப்புப் பிரேரணையை வற்புறுத்த மாட்டார்கள் என்று நினைக்கிறேன். வற்புறுத்துவதாக இருந்தால் நான் வேறு மருந்து சொல்கிறேன். (சிரிப்பு).

### VI.—CALLING ATTENTION TO THE INADEQUATE SUPPLY OF AMMONIUM SULPHATE TO LALGUDI AREA.

MR. SPEAKER: I have received notice under Rule 41 of the Assembly Rules from Sri S. Lazar caling the attention of the Hon. Minister for Home to a matter of urgent public importance, viz., inadequate supply of Ammonium Sulphate to Lalgudi area and the consequent sufferings and disappointment of agriculturists.

SRI S. LAZAR: Mr. Speaker, Sir, I beg to call the attention of the Hon. the Minister for Home to a matter of urgent public importance, viz., inadequate supply of Ammonium Sulphate to Lalgudi area and the consequent sufferings and disappontment of agriculturists. 9-30 a.m. கனம் சபாநாயகர் அவர்களே, கடந்த ஆண்டு லால்குடி பகுதியிலே அமோனியம் உரம் விவசாயி களுக்குக் கொடுப்பதற்காக திட்டங்கள் ஏற்பாடு செய்யப் பட்டன. போதிய அளவு கொடுப்பதற்கு எல்லா ஏற்பாடுகளைச் செய்யும் என்று அரசாங்கம் உறுதி கூறியும் துரதிஷ்டவசமாக லால்குடி பகுதியிலே விவசாயப் பெருமக்கள் ரசாயன உரங்கள் பெறமுடியாமல் கஷ்டப்படுகிறார்கள். ஏக்கர் ஒன்றுக்கு 32 பவுண்ட் அம்மோனியம் சல்பேட், 14 பவுண்ட் யூரியா விவசாயி களுக்குக் கொடுக்க இருந்தது. அவ்வளவுதான் கலெக்டரால்